கானகமுழுதும்வாசங்கமழ்தரக்குக்குலத்தி
னீனறும்புகையெழுப்பிநெடுநிலங்குருதிபாய
நானெடுஞ்செவியகோட்டநண்ணியதிரிமருப்பி
னூனமொன்றானுமில்லாவுயர்விடைபலபடுத்தான். (௫௬)

தேன்பழங்கிழங்குதொப்பிசெறியவையரிசியட்ட
வான்பதந்தினையின்மாவைவனத்தின்வாலரிசிநன்மா
வான்பயமபெய்தமைத்தால்சிதேக்கிலையிற்பெய்து
காண்பயிற்கடவுட்கேற்றிக்களித்தனன்றேவராளன். (௫௭)

இதுமுதல் ௭-செய்யுள்களுண்டல்.

மறவமெல்லணங்கனோடும்வனதெய்வமபராய்வணங்கி
முறையறிதேவராளன்முழுவிடைக்குருதிதோய்செந்
நிறமுறுசேடைசாத்துநெற்றியர்தெய்வமுண்ட
வுறுசுவையுண்டியெல்லாமுண்டுளங்களித்தானன்றே. (௫௮)

வெடிகுரற்சிலைக்கைச்செங்கண்வேடரும்பவளச்செவ்வாய்த்
தடமலர்க்கருங்கணாருந்தசும்பினுண்ணிறைத்துவைத்த
கடிகொள்கட்டேறலங்கைமடக்குபுநிறையவுண்டா
ருடைநடைசொற்கள்சோரவொருவர்மேலொருவர்வீழ்ந்தார். ()

சிற்றிடையொருத்திதைத்ததேக்கிலைத்தேறலேந்தி
மற்றதனகந்தோன்றுந்தன்மதிமுகநோக்கியுண்டாள்
கற்றையங்கதிர்வெண்டிங்கள்களொடென்வயிறுபுக்கின்
றிற்றதுநிலவுநம்மூர்க்கினியிலையுண்மையென்றாள். (௬௦)

களிதருதேறலுண்டுகளித்தியேற்பரிதிச்செல்வ
விளிவினின்வெம்மையாறிவெண்ணிலாத்திங்கள்போலக்
குளிர்கதிர்பெறுவையீவல்கொள்கெனப்பிழியலேந்தி
யிளிமொழியொருத்திவானத்தியல்சுடரழைத்துநின்றாள் (௬௧)

செறிதொடியொருத்தியுண்டதேமபிழிமயக்கந்தன்னாற்
பிறனொருவனைத்தன்காதற்பிரியருங்கொழுநனென்றே
யிறுகிளமுலையழுந்தவிறுகுறத்தழுவினாளக்
கறைகெழுவேலினானைக்கள்ளினைப்பலபுகழ்ந்தான். (௬௨)

கருங்கணாளொருத்திதன்வாய்க்கடைவழிநுரைவேட்டெய்துஞ்
சுரும்பினைவளைகளார்ப்பத்தோன்றியங்கையாலோச்சி
விரும்புநின்பெண்டிர்பாற்போய்விம்மவாய்பருகென்றாடி
வருந்தலைமகனோடூடிவைதல்போல்வைதுநின்றாள். (௬௩)

பணங்கமழ்மலர்த்துதைந்தவஞ்சியங்கொடியினைத்தன்
மணங்கிடையகனென்றுன்பூவாயைத்தேனெறுழுகலஞ்சி
யணங்குநீதிறநதிடாயேலவரியனேனுய்வனேவென்
றுணங்கியமனத்தாற்றாழவொருமகன்களியபுமிககான். (௬௫)

ஊசலாடல்

உண்கடுக்கண்மயக்கமொழிந்தபிற்கணவராட்டப்
பண்படுகிளவிநல்லார்படர்முலைவடம்பிணங்கக்
கண்கொளலருநுசுப்புக்கவன்றழநுதல்வியர்ப்ப
விண்பொருசினையவாலின்வீழூசலாடினாரால். (௬௬)

மறவர்கள் மறத்தியரிடத்தில் இன்பநுகர்தல்

பொரிமலரனையபுன்கம்புதுநிழற்புளினந்தோறும்
விரிகதிரசெஞ்ஞாயிற்றின்வெயில்புகாப்பொதும்பர்தோறும்
தருமிடையமுதைர்நறுஞ்சமாலநீளாங்கந்தோறும்
வரிசிலைமறவர்செவ்வாய்மறத்தியர்போகமுண்டார். (௬௭)

சிரமபரிகாரஞ் செய்தல்

பூமிசைகின்றசைந்துவிழுமணியருவிபார்த்துக்
காமருமணிக்கலாபகளிமயிலாடல்கண்டு
தேமலர்வனத்துலாயுஞ்சிலம்பெதிர்கூயழைத்து
மாமதிமுகநதினர்தமமகிழ்நராடாடினரே. (௬௭)

திண்ணனர் தன்னூருக்கு வந்தமை.

இன்னணமெங்குமாடியெய்தியசிலைவல்லாரு
மின்னனிடையழுதிரங்கவிங்கியகுவவும்கொம்மைப்
பொன்னனர்தாமுஞ்சூழ்ந்துபோதரவந்தநங்கித்
தன்னமருமப்பூர்புக்காளறடக்கையமைப்பனேனே. (௬௮)

இதுமுதல் ௨-செய்யுள் நாகன் திண்ணனர் ஆசிசெந்து வேட்டையாட ஆணையிடுதல்.

மற்றைநாள்தருகணைமத்தமைந்தனையுடகேட்டி
யிற்றைநாண்முதலாநீயேயிறவுளர்க்கிறைவனாகிப்
பற்றலர்முனைமுருக்கிப்பாரப்புலம்காவாந்துகொற்றம
பெற்றுமாவேட்டையாடிப்பெரிதுவாழ்ந்திருத்தியென்றே. (௬௯)

வழிவழிவந்தவெற்றிவரிசிலைகைகொடுத்துக்
கழிபெருங்காதறன்றோற்கன்னலிரேண்டுறழங்கத்
தழுவிநங்கடவுட்செம்மைடன்னருமேனையாச்சென்று
மழவிடைகன்னிவேட்டம்வாய்த்தடன்வருகவெனருள். (௭0)

திண்ணனார் பிதாவையும் தாயையும் வணங்க தாய் மகிழ்ச்சியடைந்தமை.

என்றதன்றாதைபொற்றாளிறைஞ்சுபுவிடைகொண்டன்னை
தன்றிருவடிபணிந்தான்றாயெனைப்பெற்றதாயே
மன்றலங்களிறேயிங்குவருகெனவெடுத்துப்புல்லிக்
குன்றுறழ்மூலைப்பால்சோரக்குழைந்துநெஞ்சுச்சிமோந்தாள்.()

தாய் திண்ணனாரை ஆசீர்வதித்து விபூதிசாத்தி வேட்டைக்கு அனுப்புதல்.

போகுகானெறிகளெல்லாம்புதுமலர்த்தண்ணென்சோலை
யாகவேபுகுந்துவேட்டமாடிமுட்கிழியுமின்றிச்
சேகுநோன்சிலையாரோடுந்திருமபுககண்ணேறின்றி
மேகமேயனையாயென்றுவெண்பொடிசாத்தினாளால். (எஉ)

இதுமுதல்-உ-செய்யுள் வேட்டைக்குரியவடிவுகொள்ளல்.

தாயடிமறித்துந்தாழ்ந்துதரும்விடைகொண்டுநீங்கி
மேயநீணிறங்கொள்கச்சைவிசித்துடைவாளும்யாத்திட்
டாயிளந்தளிர்தொடுத்தவலங்கலஙகண்ணிவேய்ந்து
மாயவன்றொடுதோட்டுவரிசிலையெடுத்துக்கொண்டான்,

மலர்தலைபுலகில்யார்க்கும்வணங்கிலாக்கொடுமரத்தைக்
குலவரையனையதோளான்குணங்கொளீஇவணங்குவித்தான்
வலிகெழுசிலைகுழைக்கும்வனமைவான்குடிப்பிறந்தோர்
சிலாகொடுமரமவணக்கஞ்செயலிறும்பூதுகொல்லோ. (எச)

இதுமுதல் ௰ச-செய்யுள் வேட்டைச்சிறப்பு.

இருமுதுகுரவர்களாவீண்டியமயிர்பொடிப்பத்
தருமிசைப்பறைவையெல்லாந்தனித்தனிவெருவியோட
வெருள்கொடுவிலங்குனீட்டமவேறுவேறிரிதல்செய்ய
வரைபொருதோளினொன்றைறைவந்துநாணொலிசெய்தானால். (எரு)

வில்லினரம்பினார்வெவ்வெடிபடுகுரலர்காலிற்
செல்பவர்மினனுவாளர்செறிமழைமேகமன்னார்
கொல்லடிபிடிதுரத்துகுத்துவெட்டெறியெய்யென்னுஞ்
சொல்லினர்தணியாச்சீற்றத்துப்பினாசூழச்சென்றான். (எசு)

கணைபிறகொழியவோடுங்கடுப்பினகொடுங்கூர்ம்பல்ல
தணிவருசினததவேட்டந்தனித்தனியாடவல்ல
வணியெயிற்றழவெஞ்சீற்றத்தரியின்மேல்விடினுஞ்செல்வ
பிணிதொடாபாசத்தோடுபெருவலிநாய்கள்சென்ற, (எஎ)

வலத்திலுமிடத்துமுன்னும்பின்னருமாறிமாறிக்
கொலைத்தொழிற்சுருள்வானீணுக்கொடுஞ்செவிஞமலிசெல்ல
புலப்பில்போரற்றல்வேடரொடுவினைதுவலைக்கண்ணி
மிலைச்சியவேடர்வேந்தன்வேட்டயங்காடுபுக்கான். (எஅ)

பலபலவிலங்கினீட்டம்பயிலிடமறிந்துசுற்றும்
வலிவலைசூழ்ந்துசேணில்வழியொதுக்கியபின்வேடர்
கலிகெழுதுடிகள்பம்பைகடுங்குரலிரலையாதி
யொலியெழுவித்துமாக்களுறுவலைபுகத்துரந்தார். (எகூ)

பக்கபிற்றுமும்புக்குப்புகுவழியொடியெறிந்து
மிக்கவல்லூழுவைகெழன்மிடைமயிர்க்கரடிமுன்னுத்
தொக்கபல்விலங்கின்பார்வைசூழ்வலைப்பரப்புள்விட்டார்
மைக்கருஞ்சிலைக்கைவேடர்வயின்வயின்மறைந்துநின்றார். ( )

விட்டபார்வையின்விளியிலைவண்
கிட்டிவந்தமான்கிளையெலாமுடன்
பட்டுவீழ்தரப்பகழிதூவினர்
மட்டிலாவலிவல்வில்வேடரே. (அக)

காலிற்செல்லுநாய்க்கணந்தடுத்தலாற்
சாலச்சீறுபுதடையுட்பட்டமா
நீலக்குன்றெனுநிகர்களிற்றினம்
வேலிற்குத்தினார்சிலவர்வேடரே. (அஉ)

மிடைசெடியிடைமறைமறவர்கள்விடுகணையுடலுருவப்
பந்தலுமயலுறுகொடுவரிபாய்தந்ததென்றதனைச்
சுந்தழலடுவெகுளியினெடுதொடர்குடர்சரிதரவெண்
டமுனைவளர்பிறையெயிறறத்தாக்கியதொருகருமா. (அங)

பரியனைமயிர்மறைவரிபடுசிலைமுரணுரவோர்
பொருவினைசரமுருவியவுடல்பொருவருமொருகருமா
வெரிபுணர்தருபெருவெகுளியொடெய்கணைவழிபோயவ்
விருடருமரமுரிதரவுருமெனத்தாக்கியதன்றே. (அச)

எழுவுடனெழின்முழவிழிவுசெய்தெழுபெருவலிகெழுதோண்
முழுமறவரினெழுகியகணைமுழுகியவுடலுழுவை
வழைகுழைகழைவிழைநிழலிடுமழைதவழ்மலையதிரத்
தழைசெவிமழவழுவைகள்விழத்தாக்கியதுறுவிசையால். (அரு)

வெய்யவர்குலமுய்வகைவருமெய்யருள்பெறுதிண்ண
னையமிறுணைமொய்வலிகெழுமையவில்வலசில்லர்
மையொடுநிகர்மெய்யுருவியவையுறுமுனைமுள்ளை
யெய்புதறினவொய்யெனவெதிரெய்யடுகணையென்ன. (௮௬)

கணைமாமழையிடிபோலதிர்கவேய்மனையாமா
வினையாவலியுடைமாகளிறெழுவாய்வனம்வாழ்மா
வனைவார்கழன்மதயானைகண்மலைவார்விடுவார்கோன்
முனைவாளிகளுடன்மூழ்கலின்முளவாயினமாதோ. (௮௭)

திண்ணனார்வேடர்களோடுதேனூருக்குவந்தமை.

இவ்வகைபலவிலங்கினீட்டமுநூழிலாட்டித்
தெவ்வடுவரிசிலைக்கைத்திண்ணன்மாவேட்டமுற்றிக்
கௌவைகொள்கானநீங்கிக்கடுந்திறன்மறவரோடு
மெவ்வமிறனதூர்புக்கானின்றவர்க்குவகைபொங்க. (௮௮)

இதுமுதல்(௩௮)செய்யுள்கதை.

பின்னரும்பலகால்வேட்டம்பெருவலிக்கானையாடி
யன்னையுமத்தனுங்கண்டகமகிழ்பூப்பவைகிக்
கொன்னுனைப்பகழிவேடர்குலத்தொடும்வாழ்த்தவோர்நாட்
டன்னுளம்வேட்டமூக்கச்சரம்புகாவனம்புகுந்தான். (௮௯)

பகுந்தவன்கானமெங்கும்புக்குலாய்மிகவிளைத்து
மிகுந்தழைமிடைமரத்திலென்னிழறனிதுயின்றான்
முகுந்தனைவாளியாக்கிமுரணினரரணம்வேவ
நகுந்தனிமுதல்வனன்றன்கனவிடைநண்ணினானே. (௯௦)

பூசியதிருவெண்ணீறும்புலியதளுடையுஞ்செக்கர்
கூசுபொன்சடையுங்கொண்டகோலத்தோடெதிர்நின்றொன்று
மேசுதவிலாதமைந்தவிவ்வடமூலத்திற்
காசில்பொன்முகரியாற்றங்கரையிலோரிலிங்கமுண்டால். (௯௧)

அதுதுயரனைத்தும்வீட்டியரும்பெறலின்பநல்கு
மதவலியதைநீசென்றுவணங்குதியென்றுரைத்துக்
கதுமெனமறைந்தானுங்கேகண்விழித்திறும்பூதெய்தி
யெதிரில்பேராற்றலான்றிக்கெங்கணுநோக்கிநின்றான். (௯௨)

ஆயகாலையில்வில்வேடரார்ப்பினுவெழுந்துகான்சூழ்
போயவல்வலைபரிந்துபொருகடுங்காவிற்பொங்கி
மாயிருங்கேழலொன்றுமலைபுகப்போதல்கண்டான்
காயழல்வெகுளியான்பின்கையில்வில்லொடுதுரந்தான். (௯௩)

தூரந்துபின்செல்லச்செல்லத்துணைவிற்போயெறழியாற்கீ
ழிருந்தருளிலிங்கத்தின்பாலெய்தலுமறைந்ததண்ணல்
வரம்பில்விம்மிதத்தனாகிமற்றிதுமறைந்ததென்னோ
தெரிந்திலமென்றுன்னான்சிவலிங்கமிருத்தல்கண்டான். (௯௪)

காண்டலுங்கடவுளார்தங்கருணைநோக்கினிதுபெற்று
மாண்டகுமிரதந்தோய்ந்தவல்லிரும்புருவமாறி
மீண்டொளிகெழுபொன்னாவதென்னமுற்குணங்கண்மாறி
யாண்டகையிறைவன்றன்பாலன்பொருவடிவமானான். (௯௫)

நாள்பலபிரிந்திருந்துநண்ணியசிறுசதங்கைத்
தாளிளமகனைக்கண்டதாயெனத்தாழாதோடி
நீளெழுவனையதோள்கணொழுங்குறத்தழுவிமோந்து
வாளழலரக்கினன்னமனத்தினான்முத்தங்கொண்டான். (௯௬)

செய்யகண்ணீரரும்பச்செறிமயிர்பொடிப்பவாதன்
கையகப்பட்டதெய்வக்கதிர்விடுமணியினாயேற்
கையன்வந்தகப்பட்டானென்றணியெயிறிலங்கநக்கு
மெய்யெலாமெய்யன்பாயவிடலைமற்றின்னசொல்வான் (௯௭)

யானையும்புலியுமெண்கும்யாளியுமுளவுங்கூர்ங்கோட்
டேனமுந்திரியுங்காட்டுளெந்தைநீதுணையுமின்றிக்
கூனல்விற்றடக்கைவேடர்குலமெனவிருப்பதென்னே
யூனுணவுனக்கியாவருண்கெனத்தருவாரந்தோ. (௯௮)

தேனொடுதினையின்பிண்டிதீம்பழங்காய்கிழங்கு
மானொடுமுழுவெய்கேழல்வல்லுடும்பழுங்கிவற்றி
னூனுணவென்றிவ்வெல்லாமுதவுவல்யானேநல்ல
கானவர்துணையுண்டெம்மூர்க்காண்டிவாவென்றுநின்றான். ()

சாமிநீதனியேயீண்டுத்தங்குதறரித்தலாற்றே
னேமநல்லுடெப்பூர்க்கின்னேயென்னொடுவருதல்வேண்டும்
நீமனமிரங்காயெந்தாயெனப்பலநிகழ்த்தினானக்
கார்மழையனையானற்புக்கடலினுக்கெல்லையுண்டோ. (௧௦௦)

மறுமொழியிறைவனொன்றும்வழங்கலனிருப்பமீளி
யிறைதிருவுளத்தினெண்ணமிவ்வயினிருத்தல்போலுஞ்
சிறியனேனினியித்தெய்வசிகாமணிதன்னைநீங்கி
லுறுவனோவுயிரினோடென்றுரைத்தனனின்றானங்கே. (௧௦௧)

அண்ணறன்முடியிற்றூய்நீராட்டுபுமுருகுவிம்மூத்
தண்ணுறுமலர்மாலூரத்தளிர்சூட்டியிருத்தல்காணூஉப்
பண்ணவன்றனக்கீதேற்றபணியெனத்தேறியுள்ள
மண்ணெழுவனையதோளான்மற்றதுகடைப்பிடித்தான். (௧0௨)

பின்புவேட்டுவர்தங்கோமான்பெரும்பகலாயிற்றன்றோ
வென்பெருந்துணையாய்நின்றவிறைவனார்மிகப்பசித்தா
ரின்சுவையூன்கொணர்ந்திங்கிடல்வேண்டுமென்னநீங்கிற்
கொன்றினவிலங்கினீட்டங்குறுகியென்செயுமோகெட்டேன், ()

என்றுசாலவுமிரங்கியெரிபசிமிகாதமுன்னஞ்
சென்றொருகணத்துட்கொண்டுதிரும்புவலெனத்துணிந்து
குன்றிடையெனக்குவாய்த்தகுலமணிவிளக்கேயெந்தா
யுன்றழற்பசிதணிப்பவுறுசுவையிறைச்சிகொண்டே. (௧0௪)

உழுந்துருள்பொழுதின்மீளவேனொருகணமேனுந்தாழேன்
வழுங்குறுகொடுவிலங்குவருமெனவஞ்சேலைய
வெழுந்துமேல்வந்ததாயினென்னையொய்யெனக்கூவென்று
குழைந்தவிற்றடக்கைகூப்பிக்குறவர்கோனரினீங்கி. (௧0௫)

கடிக்கடிமனையுணின்றகன்றகல்புனிற்றாப்போல
வடிக்கடிதிரும்பிநின்றேயையர்தந்தனிமைக்கேங்கி
வடிக்கடியம்புபட்டுமழைமுகிலெனக்கிடக்குங்
கிடிக்கடிவேட்டைக்கானங்கிளர்கடுங்காலிற்சென்றான். (௧0௬)

கொழுந்தசைமோழலொன்றுகுறவர்கோன்றானேயேந்தி
முழங்கலையெறியுநன்னீர்முகரியின்றீரஞ்சார்ந்தோர்
செழுந்தருநிழலின்வைத்துத்தீயரணியினாலாக்கி
யெழுந்துறுமயிர்கடிந்தவ்வெறுழியையவாளினீர்ந்தான். (௧0௭)

ஈர்ந்துசெந்தசையுட்சாலவின்சுவையுடையவெல்லாந்
தேர்ந்துவேறெடுத்தெடுத்துத்தேக்கிலையதனுட்பெய்து
கூர்ந்தவாயம்பிற்கோத்துக்கொந்தழல்பதத்திற்காய்ச்சி
யார்ந்தபோன்பன்வாய்ப்பெய்தருஞ்சுவைபார்க்கலுற்றான். ()

பல்லினான்மெல்லமெல்லப்பன்முறையதுக்கிப்பார்த்து
நல்லனவிறைச்சியெல்லாநவையிறேக்கிலையிற்றைத்த
கல்லையுள்வாங்கிவைத்துக்கழிசுவையிலாதவெல்லாம்
வல்லைவெள்ளிடையுமிழ்ந்தான்வருபவக்கடலுமிழ்ந்தான். ()

பூந்தளிரோடுகொய்தபுதுமலர்தலையிற்பெய்து
தாந்திரவிறியின்றூட்டுந்தண்புனல்வாய்முகந்து
தீந்தசையமுதுபெய்தகேதக்கிலைத்தளிகையோர்கை [ண்.
யேந்தியம்பொடுவில்லோர்கையெடுத்துவல்விரைவிற்போந்தா

என்னாருயிர்க்குத்துணையாவாரெரிவெம்பசியாலிளைத்தாரோ
வென்னோகொடியவிலங்கினத்தாலச்சுற்றாரோவெனப்பதைத்துத்
தன்னாதரவிற்பார்ப்பருந்தத்தாழாதோடும்பறவையென
முன்னாமனமும்பின்னாகமுதல்வன்றன்பாலோடினான். (௧௧௧)

சென்றுகுறுகியெம்பெருமானேநீயோன்வரவுதாழ்த்தலினாற்
கன்றுபசியால்வருந்தினையேயென்றுகரைந்துதிருமுடிமேற்
றான்றுதளிருஞ்செழும்போதுந்தொடுதோலடியான்மாற்றிவா
யொன்றுநீராற்பிரானுடலோடுள்ளங்குளிரவாட்டினான். (௧௧௨)

ஆட்டித்தலையிலிருந்தகமழலருந்தளிருமெடுத்திறைஞ்சிச் [த்
சூட்டித்திருமுன்னிலைக்கலத்திற்றூயவிறைச்சிப்போனகம்வை
யீட்டற்கரியபெரும்பொருளேயெந்தாயுண்கென்றினியசொலி
யூட்டிப்பிரியாதருகுநின்றானுவகைக்கடற்குக்கரைகாணான். ( )

காலமங்கதில்வேடர்தந்தலைவனைக்காணார்
சாலவச்சுறீஇக்காடெலாந்தேடியத்தடங்கோட்
டாலமூலத்தினிருந்தருளண்ணறன்னருகு
நீலமால்வரைநின்றெனநிற்பவற்கண்டார். (௧௧௪)

அருகுசென்றடைந்தையநீயெங்களையகன்றிப்
பெரியமால்வரையடைந்ததென்பிழைத்தனங்கொல்லோ
பரிதிவானவனண்பகல்கடந்தனன்பசித்தாய்
முருகவிவ்வுழிநிற்பதென்வருகெனமொழிந்தார். (௧௧௫)

கரைந்தசொற்கெலாமெதிர்மொழிகொடாமையிற்கவன்று
பெருந்தகாயுனக்கெங்கண்மேன்முனிவென்கொல்பேசாய்
வருந்திநீயிவண்வந்தமையறிந்திலம்வள்ளா
லிரங்குவார்கழனின்னடியறியவென்றிசைத்தார். (௧௧௬)

மற்றதற்குமொன்றுரைத்திலனிற்பவம்மறவர்
கொற்றவில்லுடைக்குரிசினீயுளத்திலென்கொண்டாய்
சற்றுமெம்மிடத்தன்பிலையாயினைதலைவ
குற்றமெம்வயிற்கண்டதுண்டேற்பிறகூறாய். (௧௧௭)

## கண்ணப்பச்சருக்கம்.

என்றுபற்பலதிறத்தினாலுரைக்கவுமிளையோ
னொன்றும்வாய்திறந்தானலனோவியம்போலக்
குன்றவில்லியைநோக்கிநின்றானவர்குறித்து
மன்றவெஞ்சினமன்றிதுவெனவெனமருண்டார். (௧௧௮)

இங்குநின்றவித்தெய்வதமிவனிடத்தேறித்
தங்கிநின்றதோவென்கொலோவறிகிலந்தமியே
மங்குநம்மொடுருபவனலனிவனந்தோ
நங்கடொல்குலத்தலைவனாகற்கென்னுனைப்போம். (௧௧௯)

தத்தையாகியதத்தையஞ்சேமொழித்தையன்
மத்தயானைபோலென்மகனெங்கெனின்மறுசொ
லெத்திறத்தினாற்சொல்லுதுமெனப்பலவிரங்கி
யெய்த்துநின்றனர்வசிக்கவோருபாயமுமில்லார். (௧௨௦)

குழைக்குநோன்சிலைநாகனோடிச்செயல்கூறி
யழைத்துவந்தனமெனிலவனெத்திறத்தானும்
பிழைக்குமாறியற்றுவனெனத்துணிந்தனர்பெயர்ந்தார்
தழைத்தலைப்புலானாறும்வாய்ச்செய்யகட்சவரர். (௧௨௧)

இதுமுதல்(௨)செய்யுள்இரவுக்குறி.

அன்னகாலையிலாயிரங்கதிர்ச்சுடரரசன்
மன்னுதிண்ணனன்பப்புறத்துலகெலாம்விழுங்கப்
பன்னுமேவமெனப்போதல்போற்குடதிசைப்பராரைச்
சென்னிவான்றொடுமலைமறைந்தானிருள்செறிய. (௧௨௨)

அரவுமிழ்ந்தசெம்மணிக்கணமிமைத்தலினலரி
யினைதினைக்கடன்மூழ்கியுங்கங்குலங்கில்லை
யிருள்கெடச்சுடர்விரிதருவிலைவரம்பில்லா
வுருவமாமணிபலவுளவிடத்திரவுண்டோ. (௧௨௩)

அண்ணலைக்கொடுவிலங்கினங்குறுகுதலஞ்சி
வண்ணுதிக்கணைதொடுத்தகூன்வில்லொடுமறந்துந்
துண்ணிமைத்திலனாகியேவைகறைகாறு
மண்ணெழுப்புனைதோளனின்றானிறைமருங்கு. (௧௨௪)

அன்பரன்பினுக்ககப்படுபேரருளாழிக்
கின்பவூன்றிருவமுதமாக்கியவுளத்தெண்ணி
வன்பெருஞ்சிலைத்தடக்கையான்வைகறைப்போது
பொன்பரந்தொளிர்மால்வரைச்சாரலிற்போந்தான். (௧௨௫)

## சூரியனுதித்தல்.

வீட்டவாவுடையார்க்கருட்டருமொருவிமல
னாட்டமாகியதான்கொளபுண்ணுற்றிநிரம்பி
வேட்டமாடுதல்காணியவிரும்பிவந்தென்னக்
கோட்டவார்திரைக்கடலெழுந்தான்சுடர்க்கோமான். (கஉகூ)

இதுமுதல்(௫)செய்யுள்சிவகோசாரியார்மகிமைகூறல்.

பொங்குவெஞ்சினப்புண்கமழ்வாளுகிர்ச
சிங்கமன்னனசெயகரிற்கமற்றினிக
கங்கைவாசடைக்கண்ணுதருண்மூத
றங்குநெஞ்சத்தவன்செயல்சாற்றுவாம். (கஉ௭)

அருளுமானுப்பொறையுமறிவொடு
தெருளுநோன்புஞ்சிவனிடத்தன்பினோ
டிருளிற்றீரவாவின்மையுங்கல்வியு
மருளின்மெய்ம்மையுமாணுருவாயினன். (கஉ௮)

வெறுப்பில்சந்தனமெய்யெலாம்பூசினின்
றிறப்பவின்பமியற்றுநர்தங்கணுங்
கறுத்தெழுந்தெதிர்காயழற்பெயதுதன்
புறத்துவார்கணுமொசதவுளத்தினன். (கஉகூ)

நீடுங்கார்க்குழனீளறிவாள்விழி
வாடுஞ்சிற்றிடைமாதர்கள்புல்லினு
நாடுந்தன்னுளந்தாயெனநண்ணுவா
னோடும்பொன்னுமொருநிகர்நோக்குவான். (கங0)

ஈசனார்தம்மிணையடித்தாமரைப்
பூசைசெய்தொழிலாப்பூண்டுசெய்திடு
மாசைமேல்கொண்டமனத்தான்சிவ
கோசனென்னுங்குணப்பெருங்குன்றனன். (கஙக)

இதுமுதல்(௨)செய்யுள்சிவகோசாரியார்பூசைக்குச்செல்லல்.

இரவிவந்தெழுமுன்னமெழுந்துபோய்
முரிதிரைப்புனன்மூழ்கிவிதிமுறை
வினைசெய்போதொடுமென்புனலுங்கொடு
புரிசடைப்பிரான்பூசிப்பவெய்தினன். (கஙஉ)

தலைமிசைத்திருமஞ்சனந்தாங்குபு
மலர்பெய்கூடையுமேந்துபுவல்வினை
விலகுமண்ணறனாமமலிளமபுபு
புலவனையன்றிருமுன்புபோயினான். (க௯௩)

இதுமுதல்(௩)செய்யுள்சிவபெருமானுக்குமுன்சிந்தியஊனங்களைக்கண்டுசிவகோசாரியார்மனமொந்துவருந்துதல்.

தேன்குலத்தொடுசெவ்வழிவண்டுளர்
கானிகடுக்கையங்கண்ணியன்முன்பெலா
ஊன்கிடத்தல்கண்டுள்ளநடுங்கியே
தான்குதித்தயலோடினன்றாழ்விலான். (க௯௪)

மேவார்வந்தடிபணியும்விண்ணோர்கண்முடிமணிக
ளோவாதுகிடந்தொளிருமுடையபிரான்றிருமுன்ன
ராவாவிக்கொடும்பாவமார்செய்தாரிதுசெய்யத்
தேவாதிதேவனார்திருவுள்ளமிசைந்தாரோ. (க௯௫)

கொல்லாமையறியாமைக்குணமாகக்கொண்டொழுகும்
பொல்லாதசிலைவேடப்புலைஞரோயிதுசெய்வா
ரொல்லாதசெயலிதையன்புடையோர்கள்கண்டக்கா
னில்லாமலிறந்திடுவர்நிற்கின்றேன்கொடுவினையேன். (க௯௬)

இதுமுதல்(௪)செய்யுள்ஆலயத்தைக்கோமயத்தால்சுத்தி
செய்துபூசைமுடித்தல்.

என்றுபலபலகூறியிணையிலானழுதிரங்கிக்
கன்றுமிடற்றிறைபூசாகாலமிகத்தாழ்க்கநா
னின்றதனாற்பயனென்னேயெனநினைந்துபுலவெல்லாந்
துன்றுமலகாலகலத்துடைத்தாப்பிநீர்தெளித்தான். (க௯௭)

பின்னரடைந்தலைபுரட்டும்பெருந்தீர்த்தம்படிந்தாடிச்
சொன்னமறைமந்திரத்தாற்றாய்தன்மைகடிந்ததற்பின்
மன்னுமுருத்திரசமகநமகத்தால்வானவர்கோன்
சென்னிமிசைப்புனலாட்டித்திருமலர்கொண்டருச்சித்தான். ()

முன்னர்நின்றுகைதலைமேன்முகிழ்த்திருகண்ணீர்பாயத்
துன்னியமெய்ம்மயிர்பொடிப்பச்சுடுதழல்வாய்ப்பட்டவரக்
கன்னமனநனியுருகியிளகமிகநாத்தழும்ப
மன்னுமனனெனுசாமமறைக்கீதம்பாடினான். (க௯௯)

பற்பலகால்வலஞ்செய்துபணிந்தரிதுநீங்கிப்போய்ச்
சிற்பரனாரடிமறவாச்சிந்தையன்றன்னிடத்தடைந்தான்
முற்பகலவேட்டர்கனோற்றமுழூனோணபாலவதரித்த
விற்படுகார்மழையன்னவிடலைசெயல்விளம்புவாம். (௧௪௰)

இதுமுதல்(௨)செய்யுள்திண்ணனார்வேட்டையாடிச்
சிவபெருமானைமுன்போற்பூசித்துநீங்காதுநின்றமை.

எழுவினங்கவற்றுதோளானேறுகாற்பன்றிசெல்லும்
வழியறிந்தொளிசின்றெய்தமான்றுயிலிடனறிந்து
குழைநெடுஞ்சிலையிற்பூட்டுகோலுடலுருவவெய்து
முழுவலன்புடையான்முன்போலூறுசுவையமுதமைத்தான்.

பின்புகோற்றேனிரம்பப்பெய்துகொண்டிறைபசிக்கு
மென்பதாற்றான்றொடுத்தவேவெனவிரைவினோடி
முன்புபோற்பூசைமுற்றிமுனிவிலின்னமுதருத்தி
யன்பினாற்கடலினன்னானருகுநீங்காதுநின்றான். (௧௪௨)

திண்ணனார்செய்தியைநாகனுந்தத்தையுந்தெரிந்துவசப்படுத்
தற்குமுடியாதுநீங்கினமை.

அந்தவேலையில்வில்லோராலரும்பெறற்புதல்வன்செய்தி
தந்தையுந்தாயுங்கேட்டுத்தணிப்பருங்கலுழ்ச்சிகொண்டு
வந்துபற்பலதிறத்தால்வசிப்பவும்வசமாகானைச்
சிந்தைநொந்தினியென்னென்றுசென்றனர்மகனிற்றீர்ந்தே.

திண்ணனார் தாய்தந்தையர்வந்தமையறியாதுசிவபெருமா
னிடத்தில்அன்புசெலுத்தியிருந்தமை.

அன்னவரடைந்தவாறுமகன்றதுமறியாதண்ண
றன்னொடுபிணித்தநெஞ்சிற்சவரர்கோன்பகற்போதெல்லாம்
பொன்னவில்விலங்கினீட்டங்கொன்றிறைக்கமுதருத்தித்
துன்னிருட்காலந்துஞ்சான்றொண்டுசெய்தொழுகாநிற்ப ()

சிவகோசாரியார்முன்போலூனைக்கண்டஞ்சிசுத்திசெய்து
பூசித்துத்துன்பத்திலாழ்ந்தமை.

வழுவறுமுனியும்வந்துவைகலுந்திருமுனூன்கண்
டழுதழுதிரங்கியேங்கியகற்றுபுபுனிதஞ்செய்து
பழவிடையவற்பூசித்துமனந்துயர்க்கடலினாழ்த்தி
யொழுகிடமற்றவன்பாலுறுதுயரொழித்தல்வேண்டி. (௧௪௫)

இதுமுதல் (அ) செய்யுள் சிவபெருமான் ஐந்தாநாளிரவில்
சிவகோசாரியார்க்குத் திண்ணனார் பெருமை கூறல்.

கங்குலைந்தாவதன்கண் கனவிடைத் திருக்காளத்திச்
சங்கரன் வந்துசொல்லுந் தவத்துறைபயின்றமேலோ
யிங்குநீநம்முன்கண்டவிறைச்சியென்றிணையல்வாழி
யங்கதுநாமருந்துமருமபெறலமுதங்கண்டாய். (௧௪௬)

அதுநமக்கிடுவோன்செய்தியறைகுதுமம்மதெய்வ
நதிபலபடிந்துநோற்றுநவையிருணைங்களசெய்தும்
விதிபுறங்கண்டுபெற்றமெல்லெழின்மகன்மேற்றாய்க்குப்
புதியவன்பெனைத்தனைத்தப்புண்ணியற்கென்மேலன்பு. (௧௪௭)

மற்றவன்செருப்புக்காலான்மணங்கமழ்நமதுசென்னி
யுற்றபூமாற்றுங்காலத்துடம்பெலாமயிர்பொடிப்பச்
சிற்றிளமகன்பூங்கையாற்றிருமுலைவருடப்பெற்ற
பெற்றதாயெனனெஞ்சமபெரிதுருகுமாலன்ப. (௧௪௮)

ஐந்தடர்முனிவநம்மேலவனுமிழ்கின்றதியாற்றுட்
டுந்தநீராயினன்றேதாழ்சடைமுனிவராட்டு
நந்துமந்திரநன்னீரினனியினிதெனலாமுண்ணின்
றுந்திமேலெழுந்துபொங்கியொழுகியபேரன்பாமால். (௧௪௯)

வள்ளுகிருழுவைநோன்றாண்மாதவக்கிழவன்முன்றோ
ரொள்ளியவாழ்த்துநாமமோராயிரமுறைத்துச்சாத்துங
கள்ளவிழ்மலரினன்றான்கழுத்துறவளைந்துசூட்டு
மெள்ளுறுமயிர்கள்சூழ்ந்தவீர்ம்மலரெமக்குநல்ல. (௧௫௦)

இந்திரன்முதலோர்செம்பொனெரிமணிக்கலத்திலேந்து
மந்தரவரையினுழிமதித்தவாரமுதமெல்லா
முந்துதன்வாய்ப்பெய்தாய்ந்தமுழுச்சுவைச்சூட்டிறைச்சி
வெந்திறற்றந்தபின்னர்வேம்பொடுகடுவுமான. (௧௫௧)

ஏசுதலிலாவறத்தோயெமக்கவனெம்முனின்று
பாசில்பேரன்பினோடுவாய்திறந்துரைக்குஞ்சொற்போ
லீசகலறிவின்மிக்கவைம்புலப்பகைவர்பாடுங்
காசறுசாமவேதகானமுமினியதன்றே. (௧௫௨)

அவன்மனநமக்குக்கோயிலவனுரைபலவுமோத்தா
மவன்முயலொழில்களெல்லாமறத்தொழிலையமில்லை
யவனியில்காட்டுகின்றாமன்பனீநாளையேவந்
தவனறியாதவண்ணமயலொளித்திருத்தியென்றான். (௧௫௩)

இதுமுதல் (௧௧) செய்யுள் ஆறுநாள்சிவபூசையின்கதை.

இன்னணபலவுங்கூறி யினித்துயரொழிதியென்று
பொன்னிறம்பழுத்தகொன்றைப் புதுநறுங்கண்ணிவேய்ந்த
சென்னியந்தணன்மறைந்தான் சிவகோசமுனியெழுந்து
முன்னவன்கருணைபாற்சொன் மொழிநினைந்ததிசயித்தே. ()

ஞாயிறுகுணகுன்றநண்ணு தன்முன்னமேபோய்ப்
பாயலைமுகரிநன்னீர்ப் படிந்துநித்தியநிரப்பி
யாயிரம்பெயரினான்றன் னருச்சனைமுடித்துமற்றத்
தூயநல்லிலிங்கத்தின்பின் றோன்றிடாதொளித்திருந்தான். ()

முனிவருமுன்னம்வேட்ட முன்னுபுசென்றவென்றிக்
குனிசிலைமறவர்த்தாங்குங் கோமகன்வேட்டமாடிப்
புனிதனுக்கமுதங்கொண்டு பொருகெனமீண்டானங்கட்
பனிதருதுன்பங்காட்டும் பற்பலநிமித்தங்கண்டான். (௧௫௬)

வழியிடைநிமித்தமென்ன மற்றியான்கண்டவெல்லாம்
பழிபடுநிமித்தமென்னைப் பாவஞ்சேர்குருதிகாட்டுங்
கழிசுவையமுதமுத்தங் கண்மணியுயிரெனக்கா
மழகனெம்பெருமானென்னுற் றனன்கொலோவறிதறேற்றேன்.

எனமனங்கலங்கியொய்யென் றெறுழ்வலிக்காளைசெல்லச்
சினவிடைவலனுயர்த்த செக்கர்நீஞ்சடைமுதற்கட்
புனிதன்மற்றவனன்பெல்லாம் புண்ணியமுனிக்குக்காட்ட
நினைபுதன்வலக்கண்செம்புண் ணீருறநின்றான்கண்டான். ()

காண்டலும்வாய்நீர்சிந்தக் கையிலூன்சிதறவம்புங்
கோண்டருசிலையும்வீழக் குஞ்சிப்பூவிறையவாட்டு
நாண்டொடரற்றகாலை நாடகப்பாவைபோலத்
தூண்டருதடந்தோட்காளை துண்ணெனநிலத்துவீழ்ந்தான். ()

நெடும்பொழுதுள்ளுயிர்ப்புநின் றுயிருலந்தாரென்னக்
கிடந்துபின்னையாறெய்தக் கெடுநினைவடைந்தெழுந்தே
யொடுங்கலிறுயரானெஞ்ச முண்ணப்பட்டுருமேறுண்ட
மடங்கலேறென்னநம்பி வாய்விட்டான்கண்ணீர்வார. (௧௬௰)

முழுவலித்தடக்கையாற்றன் முகமெலாங்குருதிபொங்கி
யொழுகியவடித்துக்கொண்டா னுறுகண்ணீர்வெள்ளம்போர்த்த
வெழில்கனிமார்புவீங்க வெற்றினான்றலைபிளக்கக்
கழிதுயர்க்கடலினாழ்ந்தான் கல்லொடுமோதினானால். (௧௬௧)

ஓடுவன்மீள்வன்வீழ்வனுருள்குவனெழுந்துவிம்ம
நீடுவனந்தோவென்பனெட்டுயிர்ப்பெறிவனெஞ்சம்
வாடுவன்பொங்கிப்பொங்கிவாய்விட்டுமுகத்தைக்கையான்
மூடுவனெமுன்கைகண்மோதுவன்கற்களோடே. (கசுஉ)

எவ்வமிவெந்தையார்க்கிங்கிதுவந்ததெனக்கொன்றாம்
வெவ்வலியிழற்சீற்றத்துவேட்டுவராரோவன்றி
யிவ்வனாவிலங்கிறேற்றோதெனவறிதற்றேற
ஐவ்வுறுதெய்வைக்காணிலாவிகூ' டுண்கிலேனோ, (கசுங)

பலையிடையெனக்குவாய்த்தமரகதமணியேசெப்பொ
னிலகொளிக்குன்றேயெந்தையெம்பிரானின்கண்புண்ணீர்
கலுழ்தரற்கெனைகொல்லோகாரணந்திருவாய்சற்று
மலர்கிலையென்கொலென்றுவிசோர்ந்தருகுசென்றான். ()

கையினிற்றுடைத்தான்பல்காற்காலுதறவிராதாக
வையனைததழுவிக்கொண்டானலறினனெடும்போதெல்லாம்
பையெனவிடுத்துப்பின்புபச்சிலைமருந்துதந்து
பெய்யினோய்தீருமென்றுபெயர்ந்தனன்மருந்துகொய்ய. (கசுரு)

கானெலாம்புகுந்துசென்றுகண்டனவெல்லாய்கொய்து
கூனுலாஞ்சிலைநகைவேடர்கோமகன்றனைவிற்போந்து
வேனிலாற்காய்ந்ததேவின்விழியிடைப்பெய்தான்சோரி
தானிலாவண்ணங்கண்டான்றலையன்பறுவிசோர்ந்தான். ()

பானினியிதற்கென்செய்வேனெனவெண்ணிநிற்பவனுக்
கூனிடல்வேண்டுமென்னுமுறைகண்டுதன்கண்வாங்கி
யானவன்றடங்கணிட்டான்மாறுமென்றுளம்வலித்துக்
கானவர்பெருமான்றன்கண்கணையினாலிடந்திட்டானால். (கசுஎ)

இடந்ததன்கண்ணையண்ணலிறைகண்ணிலப்பச்சோரி
மடந்தையோர்பங்கனங்கேமாற்றினாதனைக்கண்டா
னடங்கருமகிழ்ச்சியென்னுமாழ்கடலதனுட்டாழ்ந்து
மடங்குளமடங்கலன்றான்முழவுத்தோள்கொட்டியார்த்தான்.

ஓடினான்றிசைகளெல்லாமுடம்பெலாங்குலுங்கநக்கான்
பாடினான்வாயில்வந்தபடியெலாங்கைகள்கொட்டி
யாடினான்றுள்ளித்துள்ளியாரவாரித்தானின்று
நாடினான்செய்தசெய்கைநன்றுநன்றெனவியந்தான். (கசுகூ)

இன்னணமுகமைவெள்ளத்திடையவனுலாவும்வேலை
முன்னவன்பின்னுமன்னோன்முதிர்ந்தபேரன்புகாட்டச்
செந்நிறக்குருதிமற்றைத்திருவிழியினுஞ்சோர்வித்தா
னன்னதுமைந்தனார்வவார்கலிகுடித்ததன்றே. (கஎஉ)

எரிநிரயத்துணின்றுபே வபுதுறக்கம்புக்கா
னொருவன்மற்றதனுட்பின்னும்வீழ்ந்தெனவுவகைமாறிக்
கரையிலாத்துன்பவெள்ளக்கடலினுளழுந்தியேங்கி
வரைபுரைதோளான்பின்னுமருந்துடைமையிற்றெளிந்தான். ()

இன்னுமோர்கண்ணெனக்குண்டாதலினிதற்கஞ்சேனென்
றன்னதுகளைந்தகாலையையர்கண்ணறிதற்காகத்
தன்னொருசெருப்புக்காலைத்தம்பிரான்கண்ணினூன்றிப்
பின்னைகணைகண்வைத்தான்பிரானதுபொருக்கலாற்றான். ()

திண்ணனார்க்குக்கண்ணப்பனென்னுநாமகரணம்பெற்றமை.

மறைமொழிபிறந்ததம்வாய்மலர்திறந்தருட்பேராழி
யிறைவர்கண்ணப்பநிற்கவெனமுங்கான்மொழிந்துகொண்டே
கறையணற்கண்ணைத்தகையினாற்பிடித்தார்செங்கை
யுறுநறைப்பொலம்பூமாரியும்பர்மண்புதையப்பெய்தார். (கஎரு)

கண்ணப்பனுயரன்சிவபெருமானைவணங்கசிவகோசாரியா
ருமையணங்கினைமை.

குன்றவர்பெருமான்கையிற்கூர்ங்கணைவிட்டெறிந்து
கன்றிளமடமானேந்துங்கண்ணுதலடிப்புகஞ்சந்
தன்றலைமிசைபணைந்தாள்சைவவேதிகனிறுமை
தோன்றியவுளந்தனுருகியொருதனிமுதல்வற்றாழ்ந்தான். (கஎசு)

சிவபெருமான்அவ்விருவரையுந்திருவுருவிற்
கலந்துகொண்டமை

மைதிகழ்மணிமிடற்றுவார்சடையெம்பிரானைக்
கைதவமிலாமிக்ககருணையங்கண்ணனோக்கி
மெய்தழுவனவெனின்றுவிரிவறமனமொடுக்கிச்
செய்தவர்தமக்குங்கிட்டாத்திருவுருக்கலந்துகொண்டான். ()

நூலாசிரியர்.

அற்றைநாண்முதலாவையமண்ணல்கண்ணப்பனென்று
சொற்றதேபெயராச்சொல்லுஞ்சுடர்மதிக்காந்தம்வேடா
சிற்றிடைநலார்முகத்தைத்திங்களென்றெழுக்குந்தெண்ணீ
ருற்றருவிகளாய்த்தாழுமுயர்மலைகாவலற்கே. (கஎஅ)

என்னத்திங்கள்வேலியுறைத்தவிறைனொன்றோய்
சென்னிக்குன்றம்வாழ்நர்கள்கோமான்செயல்கூற
மன்னுட்களிகொண்டையவடுத்தாமரைசூடிப்
பன்னற்கினியதோர்கதையின்னும்பகர்கென்றான். (௧௱௭)

நீதறவுரைத்தனனுசிலைவல்கண்ணப்பன்
காதைதநக்கீரனார்கதைவிளம்புதும்
யாதவமனையாந்தினிதுகேளென
மாதவவடிவருள்வள்ளல்கூறுவான். (௧௱௮)

கண்ணப்பர்சருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௱௫௫.

---

## நக்கீரச்சருக்கம்.

இதுமுதல்(௨௰)செய்யுள் பாண்டிநாட்டுச்சிறப்பு.

அமுதூறுந்தமிழொண்முத்தமையசந்தனமெல்லாசங்
கமழ்தளிர்தெனறலென்றுகளையரும்பொருள்படாம [த்
விமிழ்கடல்வளைப்பெலாந்தோன்றெண்பொருள்படுநாடெள்ளி
தமிழ்முதல்பிறக்குநாடாய்த்தயங்குமாற்பாண்டிநாடு. (௧)

மலை.

தன்கால்சுமக்குமுறுப்பிலான்றன்னேவலராணிலைகலங்கிப்
பொன்காறிதலைமுலைமடவார்ப்பொருத்துதுணையாமாநிலத்து
வன்காறரியாதுழல்வானைத்தலையாறசுமக்குமலையைக்கு
மின்கார்மழைதோய்முடிமலயவிலங்கலுடைத்தத்திருநாடு.

(இ-ள்) தன்காலினாற்சுமக்கப்பட்ட அனங்கனாகிய மன்மத
னது-பாணமாகியமலர்களாற்றமதுநிலைகலங்கியசுந்தரமூர்த்திநா
யனாரை – பொன்னொளியைவீசுகின்றதேமல்படர்ந்ததனங்களை
யுடைய பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியாரென்னு மிருவரிடத்
தும்-சேர்க்குந்தூதாக-பெரியபூமியின்கண் வலியகால்தங்காமலு
ழன்றவராகியசிவபெருமானை – முடியினாற்சுமக்கின்றகைலைமலை
யைப்பழிக்கும்-மின்னலையுடையகரியமேகங்கள்படிகின்றசிகரத்
தையுடையபொதியமலையை அப்பாண்டிநாடுடையது-எ-று. (௨)

நதி.

வானோரமுதஞ்சாபத்தான்மண்ணிற்புனலாயொழுகியது
தானேநிலத்தினியல்பாற்றன்றன்மைதிரியாவரம்பெற்ற
மானீரோமற்றிதுவென்னமதுரங்குடிகொண்டெஞ்ஞான்று
மானுதொழுகும்பொருநையாற்றரசுமுடைத்தத்திருநாடு. (௩)

### குறிஞ்சிநிலச்சிறப்பு.

கறங்குபன்மணியருவியைத்துளியொடுகலந்து
நிறங்கொண்மாமணிசேணிடைச்சிதறிடநெடுங்கைப்
பிறங்குவெண்பிறைக்கோட்டியானைகண்மதப்பெருவீ
ரிறங்குமாமுகத்தேற்பனகுறிஞ்சியினிடங்கள். (௪)

### இதுமுதல் (௩) செய்யுள் முல்லைநிலச்சிறப்பு.

கொன்றைபூத்துழைதன்னிடங்கொண்டுகூர்ங்கோட்டு
வென்றியேறுபெற்றண்டைத்தாங்குபுவீயா
தென்றும்யாறுதன்றலைக்கெழீஇமுக்கணெம்மிறைபோற்
றுன்றுபல்பசுச்சேரிடமாய்முல்லைதோன்றும். (௫)

குழலினோசையுந்தயிர்கடையொலியுங்கொல்லேறு
தழுவுமாப்புமாணிரைமணியரவமுநண்ணென்
செழுமலர்க்கொன்றைபடுசுரும்பிசையுமவெஞ்சினத்த
மழவிடைக்குலம்வாய்விடுமுழக்கமுமாரு. (௬)

போர்விடைக்குலமுயர்ந்தெழுபுற்றுமண்சிதறக்
கூர்மருப்பினூற்குத்துபுதுகளெழக்குளம்பா
லாரழற்சினத்தொடுநிலந்தொட்டிமிலசைய
மூரிவாய்விடுமுழக்கம்விண்ணேற்றொடுமுரணும். (௭)

### இதுமுதல் (௯) செய்யுள் மருதநிலச்சிறப்பு.

தாமரைகுவளையாம்பல்சங்குசைவலமீனன்ன
மாமைவண்டாம்பைகனல்கமுகமென்றலைவந்நிறைந்து
காமருமருதமாதர்கவினுறப்பமைப்போனவ்வத்
தோமின்மாதிரிகையெல்லாந்தொகுத்ததோரிடத்தையொக்கும்.

அன்னமங்கலாரணிநடைகற்கவேட்டனையர்
பின்னுழன்றுழன்றடிசிவந்தும்பெருமையினான்
மன்னுமெய்விளர்த்ததுபெறனைத்திணுட்பதும
மென்னுமாதனத்திடையிருந்திருந்தவமியற்றும். (௯)

கழனியுட்புகுந்துறுவலிப்பகட்டினேர்கடவி
யுழுநரோதையால்வெரீஇயெழுந்தும்பரிற்பறக்கு
மழகின்மென்சிறையோதிமத்தணிசிறையடித்த
லொழுகுவான்கங்கைவெண்டிரையெறிந்திடலொக்கும். (௧௦)

சேல்களுண்டகடார்த்தியமென்சிறைச்செய்ய
காலவோதிமஞ்சிறுதிரையசைக்குமென்கமலக்
கோலநாண்மலர்ச்சேக்கையிற்பெடைதழீஇக்கொண்டு
சாலும்வண்டிசைகேட்டுறங்குவமலர்த்தடங்கள். (௧௧)

மாமலர்க்கணையோன்சிலையாயுயிர்வருத்து
தீமையின்பயனுறலெனமள்ளராற்செய்ய
காமர்தீங்கரும்பாலையாடப்படுசெவ்வை
தாமயற்கணைற்போர்கடாவிடுமொலிதாழ்க்கும். (௧௨)

யாமுழத்தியர்காற்கிணையாயிழிபெய்தத்
தாமுலைதத்தடமிடற்றெருங்கிகாத்துயர்சருக்குச்
சாமுருக்குதுமெனதெங்கின்காய்விழத்தாக்கிக்
காமாநாகிளங்கமுகொடிப்பனவராற்கணங்கள். (௧௩)

வரைகளொப்பனபோரொழுக்கியபரிவளையி
னருவியொப்பனசுற்றுபாகடுபுகைபகைசூழ்
கருமுகிற்குலமொப்பனதீங்கழைக்கரும்பின
றிரளவற்றினைச்சூழ்ந்தகாடொப்பனசெறிந்து. (௧௪)

நிரந்தமஞ்சள்கள்வாழையின்குலைதொடுநெடிய
வரம்பைபாளைவாய்க்கமுகெழிற்குலையினையடுக்கு
முரிஞ்சுமற்றவைசெய்சிறெண்குலையையவ்வுயர்ந்த
குரும்பைநெட்டிலைத்தாழைதைவருமுகிற்குலத்தை. (௧௫)

கருங்கிண்கோட்டனகுவிமுலைச்செய்யகட்காரா
னிருந்தண்பன்மலரிலஞ்சிபுண்மேய்த்திடுமிளைஞர்
பெருந்தண்மாம்பழமெறிகரும்பின்குணில்பிறங்கு
சுரும்புண்டாமரைத்தடத்துவீழ்ந்தனக்குழாந்துரக்கும். (௧௬)

நெய்தனிலச்சிறப்பு.

குளிர்கொண்முத்தொடுமுகையிற்செய்சிற்றிலிற்குழிசி
வளையுமிப்பியுங்கொண்டனத்தூவிமேல்வயங்கு
மொளிகெழீள்செந்துகிர்ப்பாவையையிருத்திமற்றுள்ளங்
களிகொள்பேதையராடுவபுன்னையங்கானல். (௧௭)

இதுமுதல்(௩)செய்யுள்திணைமயக்கம்.

ஒழுகுதீம்புனற்கொழுங்கயலொடுவராலொடுத்துக்
கழியுநுண்ணிடைக்கொடிச்சியர்கொடிச்சியர்கையிற்
பழுதிலின்சுவைக்குறிஞ்சித்தேன்சுடர்கெழுபசும்பொற்
குழைகடந்தகட்கடைச்சியர்கடைச்சியர்கொள்வார். (௧௮)

முருந்தெயிற்றியரெயிற்றியர்கருங்குழன்முல்லை
யரும்பவிழ்ந்தபூமுடிப்பர்களணிமுலையாகும்
பெருங்குடதியர்குடத்தியர்பிறங்குகோங்கரும்பு
விரிந்தபூவினுட்பொற்றுகள்பூசுவர்மெய்யில். (௧௯)

கொம்பரொத்தசிற்றிடையுழத்தியர்கள்கட்கொண்டு
பம்பரத்தியலாடவர்மனம்படப்பரந்த
சம்பரத்தியமுலைப்பரத்தியர்தளர்மருங்கு
லம்பரத்தியர்பரத்தியர்விலைமுத்தமளப்பார். (௨௦)

இதுமுதல் (௭)செய்யுள்மதுரைமாநகரின்சிறப்பு.

இன்னதன்மையவளங்கெழுபாண்டிநாடென்னு
மன்னமன்னவடிருமுகமண்டலமாகி
மன்னும்விண்ணவர்பொன்னகரத்தினைமறக்கும்
பொன்னினன்மணிமாமதின்மதுரையம்புரமே. (௨௧)

தேடிநான்முகன்செங்கண்மால்காண்கிலான்றிங்கள்
சூடினானடியார்மனத்தான்மறைத்தொகுதி
பாடினானருளாலறுபத்துநாலாட
லாடினானதிலெனினதன்பெருமையாரறைவார். (௨௨)

வைகநதியும்-கிருதமாலைநதியும்.

மொய்வம்பார்மலர்மிகநனிபோர்த்திசைமுழுதுஞ்
செய்வண்டார்த்திடவொழுகுறும்வைகைவிண்செல்லு
மைவந்தாடொளிர்மணிசெய்பொன்மாடமாமதுரைத்
தெய்வஞ்சாத்தியபன்மலர்மாலையிற்றிகழும். (௨௩)

நிலைபெயர்ந்தயல்செல்கலாத்தாரகைநிரையி
னிலகிவம்பலரிவையியங்காவகையென்னென்
றலகில்விம்மிதமுறச்செயுமந்தரத்தகடு
தலையுரிஞ்சுயர்கோபுரத்துறுசுடர்ச்சாலம். (௨௪)

அங்கண்மாடத்தின்மேற்பயின்மடந்தையரணம்வான்
கங்கையங்கமலத்திரள்வளையவூண்சருதிப்
பொங்குமாசையிற்புகவதிலுறுமனமிவைக
டங்கடொல்குலமன்மையிற்றனித்தனியிரியும். (௨௫)

மெலிநுசுப்பினார்களிமயின்மாடத்தின்மேற்றந்
நலிபகைப்பெரும்பாம்புகள்வைகலுநடுங்க
வுலவலாலிருசுடர்களுநனியுளமுவந்து
மலிபொன்மாடத்திற்றமகளிர்வேறுருவழங்கும். (௨௬)

விண்டொடர்ந்தவேரங்கடம்மேற்புறத்தாடும்
பண்டருங்குதலைப்பசுங்கிளிகடம்பணைத்தோட்
டொண்டைவாயினர்விழைதலிற்பிடித்திடத்தொடரும்
வண்டிடல்பூங்கண்ணிவிஞ்சையர்சூழ்தரவயங்கும். (௨௭)

விண்ணகட்டினைத்தொடுமுடியேறுதல்வேட்ட
வெண்ணிறப்புறப்பறந்தருகேசெலவிளங்கு
மண்ணுறுத்தியசெம்மமணிவேரமாமலரி
னெண்ணிறத்தனந்தேடழற்றுணுவையொக்கும். (௨அ)

நெடியவெண்சுதைமாடத்தின்விரிந்தவெண்ணிலவுங்
கடவுள்வான்கங்கைவெள்ளமும்வேற்றுமைகாணப்
படுகலாமையிற்கங்கைவேட்டெய்தியபரிதி
வடிவமென்சிறைப்புட்களோடன்னங்கண்மருளும். (௨௯)

இருவிசும்புதோய்மாடமேற்சுருங்கையிலிருந்து
திருவிளங்குமாநகரணிபார்த்திடுஞ்செய்ய
வரிநெடுங்கணார்தோட்கிளிகொததலின்வளர்ந்த
பருவிளங்கமுகின்குலைசெழும்பழமுதிர்க்கும். (௩௦)

இதுமுதல்(௭௨)செய்யுள்வெங்கியசூடாமணியென்னும்
டாண்டியராசன்சிறப்பு.

இணையவாம்பெருவளம்பலசிறந்தவவ்விணையி
லனகமாநகர்வெண்குடைச்செய்யகோலரசன்
புனிதவானவன்றலைக்கொளத்திங்களம்புத்தே
டனதுதொல்குலவிளக்கமோர்வழுதிபைந்தாரான். (௩௧)

நடுக்குஞ்சரதனமாமுடிநாகத்திறைவனவாழ்
வெடுக்குஞ்சரவணமைந்தனொடிணைவான்முகப்புகர
முடுக்குஞ்சரமலையான்மலையுறழ்தேர்பலவுடையான்
றொடுக்குஞ்சரமழைபாற்பகைசுடுதீப்பலவவித்தான்.

(இ-ள்) கூட்டமாகிய அரதனங்களைப்பதித்தபெரியமுடியை யுடையவிண்ணுலகத்திற்கிறைவனாகிய இந்திரனுடையவாழ்வுகளனைத்தையும்காத்தருளியமுருகக்கடவுளோடொப்பவன்-முகத்திலே புள்ளிகளாகிய நக்ஷத்திரங்களைப்பெற்ற யானைமலையையுடையவன்-மலைகளையொத்தபற்பலவாகியதேர்களையுடையவன்-பிரயோகிக்கப்படுகின்ற பாணங்களாகிய மழையினால் பலபகைகளாகியசுடுகின்றநெருப்பைத்தணித்தவன், எ-று (௩௨)

வளையாகத்தான்வளர்தோளான்செவ்
வளையாகத்தான்மதிபோல்குடையா
னரிமானனையாரணி[illegible]யந்தல்பெரு
வரிமானனையாரலர்மாலையினான்.

(இ-ள்) மலையைப்போலும்வளராநின்றபுயங்களையுடையவன் - உத்தமவிலக்கணமாகியசிவந்தமூன்றுவரியையுடையமார்பையுடையவன் - சிங்கஏறுபோன்ற அரசர்களுக்கு அழகியதலைவன் - வண்டுகளமயக்கத்தை விளைக்கும்தேனைப்பெற்றுஉண்கின்றமலர்களாற்றொடுக்கப்பட்டமாலையையுடையவன்.எ-று (௯௩)

மாயமாலைவண்டுபெண்ணின்வகைபாடுந்துழாய்மாலை
மாமாலைவண்டுபெணணிமதில்களொருமூன்றுமெய்த
காமாரியீகைப்பூங்கழனமறவாக்கருத்தினனீங்
காமாரியீகைப்புயகரதலத்தான்கடற்படையான்.

(இ-ள் கரியவண்டுகள்ஒழுங்குபெறநின்றுபண்ணின்விகற்பங்களைப்பாடுகின்றதுளசிமாலையையணிந்தபெருமைபொருந்தியவிட்டுணுமூர்த்தியைஅம்பாகச்செய்துஒருமும்மதில்களையும்அழித்தசிவபெருமானது பொன்மயமாகியமலர்போலுந்திருவடிகளைமறவாதஉள்ளத்தையுடையவன் - (கைமாறுகருதாது)நீக்கமின்றிப்பொழிகின்றமேகத்தையொத்த கொடையையுடையபொலிவாகியகைத்தலத்தையுடையவன்-சமுத்திரமபோலும்சேனைகளையுடையவன்-எ-று. (௯௪)

புயவலி-நாவு-மார்பு.

ஆடலந்திருவொடுநிலமகள்விளையாடு
நீடுசெய்குன்றமாந்தடந்தோளினுணிலவும்
பாடனங்கையாடரங்கமாநாவினன்பதும
வாடுநுண்ணிடைமடந்தையதூணியாமார்பன். (௯௫)

மறையவர்க்குத்தானம்

கலசயோனியாமுனிவான்குடித்தவக்கார்கோ
ளலைபெரும்புனன்மறிந்தும்விட்டானென்பரதுபொய்
புலமையந்தணர்பெறத்தருபொருளொடப்பொன்மா
மலையனான்பொழிதானநீர்நிறைந்தன்றுமன்றே. (௯௬)

பொய்புகல்சல்-ஒருபொருளை ஏற்றல்

திரைநெடுங்கடற்றானையவ்வரசர்கோன்செந்நா
வரிநெடுங்கணார்பலவியாற்பொய்ம்மையுமறியும்
பெரியவந்தணர்மந்திரசேடையாற்பிறங்கு
மெரிமணிப்பொலந்தொடிக்கைகளேற்றலுமறியும். (௯௭)

கீர்த்தி

உலவிலண்டமாம்புதுகுரூஆற்றிருந்தொழுகு
மலரிஞேன்வனைபொற்குடநிறைந்தயேல்வழியப்
புலவராமெகினக்குழாநனிதவப்புரிய
நிலவுதன்பெருமபுகழெனும்பாலினுனிறைத்தான். (௯௮)

பிரதாபம்அஃதாவதுபிரகாசம்

திரையகன்கடலிடத்துறந்துகிர்க்கொடிசேணீடாய்
வரைகளுக்கொளிரசெந்நிறத்தாதுமாதிரத்தெண்
கரிகளுக்கெழிற்சிந்தூரமாகுமக்கழற்கா
லரசர்தம்பிரான்றனதடற்றோன்றொளியன்றே (௩௯)

கொலை

வெற்றிவேற்படையவன்பிரதாபமாம்வெய்யோ
னுற்றவார்திரைப்பெரும்புனற்குவலயமுவப்ப
மற்றவன்றரியார்வசையிருளொடுவெயங்கும்
பற்றுதீக்கதிர்ச்சுடரொடுமறுதலைப்பட்டு (௪0)

தனது ஆளுகையின்எல்லை.

இத்தகைப்பெரும்பெயர்முடிவேந்தர்கோனிலங்கு
நீதிலத்தனிக்கவிகையானிலமெலாநிழற்றி
மெய்த்தசெய்யகோறடையறநடாய்த்திசைமேவு
மத்தவாரணமுகங்களிற்கயற்பொறிவரைந்து. (௪௧)

வேற்றரசர்திறையளித்தல்.

குருமணிக்குவால்பொற்குவைவிலையில்பூண்குவவு
முரணமணிப்பொலந்தேர்த்திரண்மனதினுமுந்தும்
பரியணிக்குழாம்பிறைமருப்பீர்ங்கவுட்பரூஉத்தா
ளருவரைக்களிற்றினத்திறையரசர்களளக்க. (௪௨)

இதுமுதல்(௩)செய்யுள்மந்திரிகள்-சங்கப்புலவர்கள்சிறப்பு.

வெளிறினுண்புலமந்திரிக்கிளையொடுமேவி
யளவில்போகந்துய்த்தினிதுவீற்றிருந்தனனந்நா
ணெளிதிரைக்கடலுலகெலாந்தம்புகழ்நிறீஇய
தளர்வில்கேள்விநக்கீரனார்முதலியசான்றோர். (௪௩)

அன்பொண்ணியவெண்ணியாங்கந்நிலையளிக்கும்
பின்புதாழ்சடைப்பெருந்தகையருளினாற்பெற்ற
பொன்பிறங்கியதெய்வதப்பலகைதம்புலமை
வன்பறிந்திடந்தரவதிலிருந்துளமகிழ்ந்து. (௪௪)

யாக்கைபெற்றவர்க்குறுதியாமறம்பொருளின்பம்
போக்கினுண்பொருளரிலறப்புதுமொழிபுணர்த்துத்
தூக்கினம்பலபலபுனைந்தெறிதிரைசுருட்டு
மாக்கருங்கடலுலகிடைத்தமிழினை வளர்த்தே. (௪௫)

சிவபெருமான்சங்கப்புலவருள் ஒருவ ராயமர்ந்தமை.

வெள்ளைத்தாமரைச்செல்வி தன்பெண் மையைவிட்டுத்திட்
டெள்ளற்பாடிலானுருவெடுத்தெனமுடியமைந்தும
பிள்ளைப்பான்பதியாமை நமியெழா றா றுப்பெருஞ்சீர்
வள்ளற்பாண்டியற்காருயிர்த்துணை யாய்வாழ்ந்தார். (௪௬)

இதுமுதல்(௪) செய்யுள் கதை.

இன்னவாறவர்வாழுநாளோர்பகலெரிகான்
மின்றுவைட்படைச்செல்வ னேனுயர்த்ததார்வேந்தன்
பொன்னெனின்மாடத்தின்மேனிலைக்குழையாடர்பூங்க
ணன்னமன்னமேனோடினிதேறினனமர்ந்தான். (௪௭)

ஆயகாலையின்மந்தமாருதத்தொடுமரிக்கண்
வேயைவென்றதோளணங்கின்வார்குழன்மணம்வீசச்
சேயனான்குவிமுகிழ்முலைசெய்யவாய்த்தேவி
மாயிருங்குழலின்மணமாமெனமதித்தான். (௪௮)

மதித்தகாவலனதுமனங்கொண்டுதன்மனத்திற்
றதைத்திருண்பொருடரவொருசெய்யுள்செய்புலவ
ரிதைக்கொள்கென்றுபொன்றாயிரமொருகிழியியற்றி
யதைப்பொற்சங்கமண்டபத்தின்முற்றூக்கினனன்றே. (௪௯)

புலவர்யாவருந்தாங்கண்டவாறுபாப்புனைந்து
தலைவன்முன்புபோய்ச்சாற்றியவனைத்தையுந்தண்டார்
மலைகொடோளினன்மறுத்தலின்வறிதகன்றனரவ்
விலகுபொற்கிழியிருந்ததங்கறுப்பவரின்றி. (௫0)

இதுமுதல்(எ)செய்யுள்பஞ்சகாலச்சிறப்பு.

காலமங்கதிலுரோணியிற்கரியவன்புகுத
வாலவெவ்வரைத்தவிருவாவினுமழன்று
கோலவெஞ்சுடர்தண்சுடரிரண்டுமவாய்க்கொள்ள
ஞாலமைந்தனும்வெள்ளியுமிகல்படநடந்தார் (௫௧)

காலைதண்பனிசொரிதலுநண்பகற்கால
நீலவான்புதைமுகிலனையபெய்வபோனின்று
மாலைதோன்றுமுன்பலர்தலைவான்கழுவியது
போலநீங்கலுநிகழ்ந்தனமழைவளம்பொன்ற. (௫௨)

பெயல்வறந்தபைங்கூழெலாம்பீளொடுகரிந்த
பயம்வறந்தனமாங்களுமலைகளும்பனிநீர்க்
கயம்வறந்தனகள்ளியுமபெண்ணையுங்கதிரின்
வெயிலின்வெந்துதம்பசுமைபோயுலர்ந்தனமிகவும். (௫௩)

உண்பதின்பனைநனிமிகக்குறைந்தனவொருங்கு
வெண்கலங்களும்வெள்ளியுஞ்செம்பொனுமவிளங்கு
மண்கொளொண்பதுமைகையநன்மணிகளுமலிந்த
வெண்பதும்பெறலரியதாயிற்றுமன்யார்க்கும். (௫௪)

நீடிந்தீப்பசியாற்குடர்கொளுந்தியநிலைத்தோ
ராடுநதின்கலாவடகுதின்றனர்நிலனகழ்ந்து
வாடும்பல்வகைக்கந்தமுந்தின்றனர்மக்கள்
காடுந்துன்றமுநிரம்பினர்தின்பனகருதி. (௫௫)

சிறுவர்கையனதாயர்தாம்பறித்தனர்தின்றார்
முறுகுதீப்பசிபொறுக்கலாற்மக்களுண்முதலா
வுறுபசுந்தசைபாவையுந்தின்றனருடம்ப
தறைபழஞ்செருப்புதுக்கினர்மானமாண்பற்றார். (௫௬)

ழுரியெங்கும்பிணமிடறுமிவ்வார்கடற்சப்பாற்
பொழிலின்கண்ணுமுற்றுலாயதூநாற்றநிளம்போழ்வாய்
முழுமுவெங்கூற்றுயிருண்டறவெறாத்ததுமுள்வாய்க்
கழுகுங்காக்கையுமலியுநரிகளுங்களித்த. (௫௭)

இதுமுதல்(௰க.)செய்யுள்கதை.

சிலர்பிழைத்தவவ்வற்கடத்திறையையர்சிக்குந்
தலைமைபெற்றயன்றருமியென்பவனுடனாந்திங்
கிலைபுயிர்க்கரணிவரிடைந்தெத்திசையேனு
மலியிலைத்துநாடெய்துவமெனமனம்வலித்தான். (௫௮)

கோயில்சென்றடைந்தருட்பெருங்கடலிணைக்குறுகித்
தாயிலன்புடையாயிவ்வுறுதிலிவிரிச்சாவேன்
போயமுய்வதற்கேற்றதுபுகுந்துநீஇச்செழுமை
யாயபின்பிவணடைகுவலெனதொழுதழுதான். (௫௯)

சூழவியந்திங்கள்வேணிக்குரிசின்மற்றதனைக்கேளா
வுழுதகந்தழையல்வாழிபன்பவொன்றறைவல்கேட்டி
வழுகிதுக்கினர்ஓர்பாத்தன்மனங்கொளவுரைத்தோர்க்கென்று
கிழியதாயிரம்பொன்சங்கக்கிளர்மணிமண்டபத்தே. (௬௰)

அஞ்சதையிப்பாவேந்தற்கறைந்தனைபெறுதியென்று
கொங்குதேர்வாழ்க்கையென்னுங்கோதிறாக்கீந்துவிட்டான்
பொய்கியகளிப்பினானும்போய்தொடாபமுதந்தன்னைத்
திங்கள்வெண்குடையினான்றன்செவிப்புலத்தூற்றினானல். ()

மற்றதுகேட்டுத்திங்கண்மருகன்றானினைந்தவண்ணஞ்
சொற்றலினினிதுவந்துதொகுசங்கத்தவர்பாற்போய்ப்
பொற்றபாட்டிசைவியென்றான்பொருக்கெனத்தருமிசென்று
கற்றவரவைமுன்சொன்னான்கவிகள்கேட்டலுமுவந்தார். (௬௨)

ஆங்கவர்தம்முட்கீரனரும்பெறற்கல்விச்செல்வத்
தோங்கியசருக்கினானிவ்வுரைத்தபாக்குற்றமென்றான்
றாங்கியவுளைகசிந்தித்தருமிதான்றனைவிற்போந்து
தேங்கமழ்கடுக்கைவேணிச்செல்வனோடிதனைச்சொன்னான். ()

கேட்டலுமங்கையற்கட்கிளியுறழ்கிளவிபங்கன்
பாட்டியற்புலவனாகிப்பாவலர்தம்பாற்போயெங்
கோட்டமில்கவிக்குக்குற்றங்கூறினரியாவனொன்று
றாட்டியபுகழ்நக்கீரனெனத்தருமிசொன்னான. (௬௪)

சொல்லலுங்குற்றம்யாதுசொல்லெனநெடுங்கணல்லார்
சில்லிருங்குழற்குநாற்றஞ்செயற்கையன்றியாகையுண்டோ
வில்லதுகூறலான்மற்றிதுகுற்றமென்றானண்ணன்
மல்லல்விண்மகளிர்கூந்தன்மணமியல்பன்றோவென்றான். (

என்றலுமரம்பையர்க்குமிருங்குழனறியநாற்ற
மின்றெனவுரைத்தானையனிறைவியென்றுலகமேத்துங்
குன்றிறைபயந்தசெல்விகூந்தலெற்றெனறான்கீரன்
றன்றனித்தருக்காலம்மைதனதுகூந்தலுமற்றென்றான். (௬௬)

எற்றினானெற்றிக்கண்ணுமெரிமருள்சடையுங்காட்ட
மாற்றருமருட்சியான்கண்டிடவெலாங்காட்டினானுஞ் [ண்டாங்
சாற்றியசெய்யுள்குற்றஞ்சடைகொண்டுவெருட்டல்வே [லான்.
தோற்றிலனிதனுக்கென்றான்றொலைவிலான்வெகுண்டுசொல்

எம்மொடுமுரணிவான்றோயிமயமால்வரைப்பூங்கொம்பின்
மைம்மலிமறைசொல்லானுமணங்கமழ்குழல்பழித்த
செம்மைகொளறிவிலாய்நீதீரப்பருங்குட்டநோய்கொண்
டிம்மையிலலைகவென்றானிப்பநக்கீரனஞ்சி. (௬௮)

மடங்கலெண்குழுவைபன்றிரணமுளவுள்ளிட்ட
கொடுஞ்சினயானையுங்குன்றமுஞ்செறிமுட்காடு
முடப்புழுபிணிதொருத்தவுள்ளங்காவெள்ளென்பாகக்
கடந்துசெல்வழிக்கண்டாறேற்கடல்புரைதடமொன்றம்பா. ()

இதுமுதல்(எ)செய்யுள் தடாகத்தின்சிறப்பு.

இச்செய்யுள்(௬) முறையேநான்குகுணத்தார்க்குஞ்சிலேடை.

சிறந்தவாங்கலைவிளங்கிதெளிநறுவொழுகச்செவ்வாய்ச்
செறிந்தசெந்தாமரைத்தண்டேடலர்மாலைதாங்கிப்
பிறந்தநாட்டொடங்கியாறைப்பிறங்குநன்னீர்புணர்த்திட்
டறந்தவாயறைவலாளரனையதத்தடந்தான்மன்றே. (௮௬)

மாண்டவாரணத்தோடரசியலோதிமந்திரிவளப்பெரிதமைந் தே, யீண்டியேயெழுந்துவந்தமேவலர்தம்மினநிலைதளர்ந்திடவ லைத்துக், காண்டகவிளங்கியுயிர்த்தொகைபுரந்துகளியளியுளர்க றுந்தண்டார்த், தூண்டருதடந்தோட்புலவுவேற்றடக்கைச்சுட ர்முடிவேந்தர்போற்றேன்றும். (௮௭)

வளரிளவலையவெள்ளியும்பொருட்மொசறுசெய்பொனுந் துய்பி, யுளர்கமழ்பதுமப்பதுமராகமுந்தேனுறுநறுநீலநீலமும் டச்,சிளவடையொளிசெய்மரகதமணியுமெகினிழற்காற்கொழுந் துகிரு, மொளிகிளர்வளைவெண்டாமரையணியுமுடையையினை ணிகரோயொக்கும். (௮௮)

பூமிமங்கையைப்பொற்புறுத்திப்பல
வேமவண்ணந்தருமேர்வளம்பெருக்
காமர்பூவிலைவித்தலினக்கயத்
தோமில்பின்னவர்போன்மெனத்தோன்றுமே. (௮௯)

இரத்தினக்கம்பளத்திற்குந்தடாகத்திற்குஞ்சிலேடை.

வெளியசெய்யகரியவொள்வீபொருட்
டிலையபாசடையென்றிவைதுன்னிய
தெளிபுனற்றடஞ்செய்யவடானம
வொளிகொள்சித்திரக்கம்பலமொக்குமே. (௯௦)

சாலவூடியதன்பெடைமீன்கொளற்
காலுமொண்சிறல்வீழொலியச்சுற
மாலுமன்னமவ்வச்சமேவாயிலாக்
கோலமென்சிறகாற்றழீஇக்கொள்ளுமே. (௯௧)

மைத்தவெண் டிசைவண் சிறைப்புள்ளிசை
தத்துபஃறகை கருரல்சங்கொலி
முத்தவெண் மருப்பியானை சீரமொள்கலி
யத்திறத்திஞர்பவெனறுமுடைத்தரோ. (௰௨)

இதுமுதல் (௫) செய்யுள் ஆலவிருட்சத்தின் சிறப்பு.

பொருவிலாவகன் பூந்தடத்தின்கரை
மரகதக்குடைபோப்பதுவான்றிசை
விரிவளக்கும் வியன்சினை தூன்றுய்வீழ்த்
திரளதோரார் திருமாணிக்கர்க்குமால். (௧௩)

காற்றழங்குகழற்கமலத்திறற்
சாறுறுமீரோழ்தலமுமளந்தவவ்
வாற்றன்மாயனறிதுயில்கொள்ளுதற்
கேற்றபைந்தளிரீட்டமுடைத்தரோ. (௧௪)

திசையினின்றதெறுசினவாரண
மசைதடக்கையிருண்முரித்தாழற்

யொசிவினீள்பணைக்கோடியுடையதால். (௧௫)

தூங்குவீழ்நுனித்தொத்திவருமுலை
வாங்குநுண்ணிடைச்சூரரமாதர்தாந்
தாங்குமூசலிஞழித்தடமுடி
யோங்குவெற்பினுதைந்துதைந்தாடுவார். (௧௬)

கேட்டுமெய்குளிர்மென்னிழனின்றமாத்
தாட்டடக்கைத்தழைசெவியானைமேற்
கோட்டினமபொற்குடம்புரைசெங்கனி
கூட்டிறும்புட்குலங்களுதிர்க்குமே. (௧௭)

இவ்விருட்சத்தின்மகிமை.

நீரில்வீழ்ந்தனநீர்பயின்மீன்களாம்
பாரில்வீழ்ந்தபறவைகளாககதிர்த்
தேரின்மேற்செல்சினைப்பஃறலையரா
வூரில்வேருன்றுயராலிலையெலாம். (௧௮)

இதுமுதல் (௩௧) செய்யுள்கதை.

அனையவாற்கீழருந்தமிழ்நாவலன்
மனனமர்ந்துவதிந்தனனுங்கொரு
சினையிநீங்கிலைபாதிதிரைப்புன
லனையவீழ்ந்ததுநன்புனற்றீரமே. (௧௯)

வீழ்ந்ததுபறவையுமீனுமாகியங்
காழ்ந்திடுபுனலினுமகன்கரைக்கணுஞ்
சூழ்ந்திடுமுலகினுந்துறவின்பாலினுந்
தாழ்ந்திடுமனமெனதத்ம்மிலீர்த்தவே. (௱)

அனையதோர்புதுமைகண்டதிசயத்தறைய்த்
தனியொருதானவண்டரித்துரைகிறு
னினைவறுகுறுமுனியிலக்கணம்பெறப்
புனைதருமிலக்கியப்புலவர்சிங்கமே. (௧0௧)

இதுமுதல்(௩)செய்யுள்பூதத்தின்வலிமை.

பரிதியந்தகன்றனைப்பயந்தபின்னர்ல்
லிருணுகர்ந்தனையவனிளவலாமெனக்
கருவிருந்தீன்றனகாட்சித்தாகிய
வொருபெரும்புதமங்குடன்றுவந்ததே. (௧0௨)

வாரியைவயிற்றுறும்வடவையோடொரு
பாரியவுருவுசெய்தென்னப்பார்மிசைக்
காரினையிடியொடுகவர்ந்துபங்கய
ேரருருவமைத்தெனவுருவமிக்கதே. (௧0௩)

இருளறியாதவல்லிரவியும்பெறு
தெருளறியாதவாணவமுந்தீர்தலின்
மருளறியாததோர்சிவமுமானவே
யருளறியாததனகமெஞ்ஞானறுமே. (௧0௪)

அடுதிறலுடையவப்பூதமாயிடை
வடநிழலமர்தரும்வள்ளற்கீரனை
நடைதளருழையிளங்கன்றுநச்சியோர்
கொடுவரிகவர்ந்தெனக்கொண்டுசென்றதே. (௧0௫)

இதுமுதல்(௨)செய்யுள்குகையின்இருள்விசேடம்.

ஆங்கொருமலைமுழையவிர்சடைப்பிரான்
பூங்கழலடிநிழல்பொருந்தினோர்தமை
நீங்கியவாணவசத்திந்த்தமா
யீங்குறுமெனநனியிருளொடொன்றுமால். (௧0௬)

பகலிடைமெலிதலும்பரந்தவல்லிடை
மிகுதலுமிலையிருள்வெற்பிணம்முழை
மகிழ்வுசெய்வாழ்விலும்வறுமையின்கணுந்
தகுதியாமனமொருதன்மைத்தாதல்போல். (௧0௭)

ஆசலாற்கயிலைகாண்பானடைந்திரணிருந்தகாலைப்
பூதமாரணரிழைப்பப்போற்றினர்க்குதவிசெய்யும
வேதநாயகநீயென்பால்விழுமமிங்கனைத்துந்தீர்த்தாய்
சோதிமாகயிலைகாட்டித்தொலைத்தருள்பிணியுமென்றான் ()

செந்தமிழாளியின்னசெப்பலுங்கருணைகூர்ந்து
சுந்தரவேடிசைபுணர்த்திக்கயிலையென்றுலவாயி
லெந்தைதகூறுமையாளின்றிலங்குதென்கயிலையாறு
மூந்துநோய்தீருமென்றுமுன்னினனிதனைச்செய்தான். (கஉரு)

கரைபொருதிரைநீர்ப்பொய்கைகாட்டியொன்றிதன்கண்மூழ்கில்
விரைபடுகொன்றைவேணிவெற்பினைக்காண்டையென்றன
னுரைபகவெறிந்தவைவேன்மணிமருள்கலாபமஞ்ஞைக்
குரைகழலறுமுகத்தெங்குடிமுழுதாளுங்கோமான். (கஉசு)

தன்றலையானடைந்ததாய்க்கலாற்கயிலைக்குன்ற
மின்றிருத்தாளாலெய்தறனக்கெளிதோநல்யானைக்
கன்றெருவிறற்சிங்கங்கருணையாற்பணித்தவாறு
நன்றெனவுளங்கொண்டங்கணல்லிசைப்புலவனென்பான். ()

முருகனைத்தொழுதுசென்றுமூழ்கினனத்தடத்தி
லிருவினைக்குறும்புகொல்லுமிலங்குதென்கயிலைதோன்றப்
பொருதிரைக்கங்கைநாணும்பொன்முகரியினெழுந்தான்
சுரர்கண்மொய்த்தலர்பூமாரிசொரிந்தனர்விசும்புபோர்ப்ப. ()

அருந்தமிழ்ப்புலவன்பொன்னையாற்றிலிட்டொருகுளத்திற்
பொருந்துவித்தனன்பயந்தபுதல்வரோர்புலவன்றன்னைத்
திருந்துறக்குளத்தின்மூழ்கச்செய்தொருநதியின்வந்து
விரைந்தெழப்புரிந்ததன்மைவியந்திடப்பட்டதன்றே. (கஉஎ)

தாழ்ந்தபொன்முகரிதன்னைச்சார்தலாற்றணந்ததென்ன
வாழ்ந்ததென்கயிலைதன்னைக்காண்கையான்மாய்ந்ததென்னச்
சூழ்ந்ததன்மேனிமாநோய்தொலைந்தெழுந்ததன்மேல்வேலை
வீழ்ந்தவெங்கதிர்குணுதுவேலையூடெழுந்ததென்ன. (கஉஅ)

மாசறுமணியைமாசுதீர்தரமண்ணலியாங்குத்
தேசறுமுருகனுகிதகிருந்துபொன்முகரிமூழ்கி
யாசறுகவிதொடுத்தவரும்பொருளெதிர்ந்தான்போற்கண்
கூசுறவொளிகொண்மேனிக்குமரன்றாதையையெதிர்ந்தான். ()

நெஞ்சக்குளமன்பெனும்புனலானிறைந்துசடைவிட்டெனவிழி
விஞ்சக்கரைகடலைக்கூப்பியிளமகுதிருக்காளத்திமலை [ந்த
நஞ்சக்கரியமிடற்றமுனைத்ஞானக்கொழுந்தைத்தொழுதிறைஞ்சி
யஞ்சக்கரமுமனத்தெண்ணியமையாவன்புமயமாகி. (௧௫௨)

கயிலைவேறுகாளத்திவேறென்றெண்ணுங்கருத்திலனாய்க்
கயிலைபாதிகாளத்திபாதியாகக்கலந்துறழ்ந்து
பயிலிற்கரும்பாமொழிபாகன்மகிழவெண்பாவந்தாதி
மயிலில்வருவோன்பேரருளால்வந்தபுலவன்பாடினன். (௧௫௩)

பாடும்புலவனென்றனக்கொருதான்பரிசுகொடுப்பத்திருவுளங்கொண்
டாடும்பெருமானெதிர்நின்றேயறைதிவேண்டிற்றெனவுடம்பு
கூடும்பிணியிங்கொழித்தவருட்குன்றேயென்றும்பேறிவை
மூடும்பிணிபுங்களைந்துனதுமுளரித்தாட்கீழிருத்தென்றான். ()

நக்கீரர்முத்தியடைந்தமை.

அந்தமாதியிலாக்கயிலையமர்ந்தபெருமானந்தாதிச்
சந்தமாலைப்புலவனதுசததிபாதத்துயர்ச்சியாற்
பந்தபாசமறமாற்றிப்பன்றியுருவாய்க்காண்பதற்கு
வந்தமாலுமறியாதமலர்த்தாணிழலிலிருத்தினன். (௧௫௫)

என்றுதிருக்காளத்திமலையெழுந்தஞானச்செழுஞ்சுடரிற்
சென்றுபுகுந்தகீரனார்செய்தியினைத்துங்கையிளமான்
கன்றுகரந்தபரன்கூறக்கழற்கால்வேந்தன்கதையின்று [தான்.
மொன்றுகருணைப்பெருங்கடலேயுரையாயடியேற்கெனத்தாழ்ந்

தீதறுகவிஞரன்செயலுரைத்தனங்
கோதையர்கயிலைசேர்கொள்கைகூறுதும்
யாதவமனனமாந்தினிதுகேளென
மாதவவடிவருள்வள்ளல்கூறுவான். (௧௫௭)

நக்கீரச்சருக்கம் முற்றிற்று.



ஆகத்திருவிருத்தம்-௭௬௨.

சிவப்பிரகாசசுவாமிகள் திருவடிவாழ்க.

உ
சிவசண்முகன்றுணை.

## வேலையசுவாமிகள்

அருளிச்செய்தது.

# கன்னியர்ச்சருக்கம்.

---

காப்பு.

பின்னவனுமுன்னவனும்பேசுகதைநிரப்பத்
தன்னையிகர்காளத்திதன்னில்வாழ் — முன்னவனெஞ்
ஞெஞ்சந்தியங்காமனீயென்னுளத்திருந்தே
யஞ்சந்தியானையருள்.

இச்செய்யுள்-அவையடக்கம்.

நல்லியற்புலவராகுநவையறுகாட்சியுள்ளோர்
சொல்லியதொடர்பினேடென்சொற்குறைக்கவியுமேவுஞ்
செல்விதன்னிடத்தோகூராச்சேயிழைமடநல்லாரு
மெல்லிதழ்க்கமலப்போதின்மேவுபுல்லியுமேபோன்று. (௨)

திருவாலவாய்ச்சிறப்பு.

மல்லன்ஞாலமோர்முடிமிசைக்கிடத்தலைமறந்த
தொல்லைநாகமொன்றழகியசொக்கனூரருளா
லெல்லைநாணியசூழ்கிடந்தனையவிஞ்சியின்மே
லல்லுலாமதிதவழ்திருவாலவாயதன்கண். (௩)

இதுமுதல்(எ)செய்யுள்பரத்தையர்வீதி.

திங்கள்வான்குடைக்கீழுலகாணையிற்செலுத்துந்
துங்கமாமதன்றறவெனும்பகைகெடத்துரப்பான்
றங்குபாசறையெனவுலகாயதசமய
மெங்கள்வாழ்பதியெனக்கணிகையர்மறுகிலங்கும். (௪)

சிற்றரும்புபேரரும்புநாண்மலரொடுசெம்மல்
பெற்றிடுந்தடமெனப்பருவங்களாற்பேத
முற்றிடுந்தெரிவையரொடுபடுமறுகுண்ணு
முற்றிடுங்களிவண்டினுடனவர்குழாமொய்க்கும். (௫)

வீதியாயிடையரசிளங்குமரர்தம்மேழை
யாதராரிளமுலையெழிலிரவலில்வாங்கக்
காதலான்மனந்தளர்ந்துசோம்பொடுதலைக்கடைமுன்
சேர்தலாற்பெயர்தூங்கலென்றுலகுரைசெய்யும். (௬)

